உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தமிழ்க்கவியவர்களியற்றிய

# சுசீந்திரத்தலபுராணம்

இஃது

பாளையங்கோட்டை

சைவசமயாபிவிர்த்திசபைத்தாபகர்

மஹாவித்வான் சித்தாந்தரத்நாகரம்

அரன்வாயல்

வேங்கடசுப்புப்பிள்ளையவர்களால்

பிழையறப்பரிசோதிக்கப்பட்டு,

சென்னை அகஸ்தியர்கூடம்

ஜீவரக்ஷார்த்தசித்தர்சபைத்தாபகர்

“மந்திர சுகவைத்திய சிங்கம்”

சி. கு. நடராஜபண்டிதரவர்கள்

விருப்பத்தின்படி.

பாளையங்கோட்டை

மு. நல்லசிவன்பிள்ளையவர்களால்

சென்னை:

இந்து யூனியன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1895.

# சூசிபத்திரம்.





உ

# புத்தகவிளம்பரம்.



அடியிற் குறித்த புத்தகங்கள் வேண்டியவர்கள் திருநெல்வேலிஜில்லா பாளையங்கோட்டை "ஆரியமதாபிவிர்த்திசபையின்" செக்ரட்டெரி யவர்களுக் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

| | கிரையம். | தபால். |
|---|---|---|
| சுசீந்திரத்தலபுராணம். | 3—0—0 | 0—1—0 |
| தூற்றுக்குடி மு. சுப்பராயபிள்ளையவர்கள் பாடிய திருச்செந்தூர் ஸ்ரீசுப்பிரமண்யர் பஜனைக்கீர்த்தனைகள். | 1—4—0 | 0—1—0 |
| இராமலிங்கசதகம். | 0—4—0 | 0—0—6 |

P. M. தேவநாயகம் அய்யங்கார்.

செக்ரட்டெரி,

"ஆரியமதாபிவிர்த்திஸபை" பாளையங்கோட்டை

உ

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்.



சென்னை அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.



நிலைமண்டிலவாசிரியப்பா.

உலகிற் சேதன ருற்ற மும்மல
மலகில் போக மவற்று லொரீஇப்
போதாந் தனது பொற்சர ணீவான்
றாதான் மியமாச் சமைந்த குணத்தை
யுன்னருஞ் சத்தியென் றோர்பெயர் நிறீஇ
யன்னவ டன்னோ லகிலமு மருளிச்
சாட்சி யளவாச் சங்கர னெழூஉங்
காட்சிக் கினிய கயிலைத் தமிழை
யம்புவி யனைத்து மமைய வமைத்த
கும்பந் தனில்வருங் கோலக் குறுமுனி
பதியா வதியும் பண்பு பயந்த
பொதிகைக் கவாசி போந்த திகையி
லொன்றே மூன்று யுருவ மாகி
நன்று யாவையு நடத்து நியதியை
மானிட ரறிவான் மனனு தூலத்திற்
றுணுமா லயனெனத் தனிப்பெயர் கொடூஉ
பாசு மறைகள் பயனு யுதித்த
வாசி னடியி லமர்ந்த பெம்மான்
வசீகரித் தோங்கி வளருந் தலமாஞ்
சுசீந்த்ர க்ஷேத்திரத் தொல்புகழ் முற்றும்
வடமொழி தன்னில் வழங்க நோக்கிப்
படர்தமிழ் மொழியாற் பாடி வைத்தன
னழிகிய முத்தமி ழார்கலிப் புகுந்து
முழுகி யாடூஉ முதிர்ந்த புலமை
யொத்தலி னியாரு முயரிறும் பூதாய்
முத்தமிழ்க் கவிஞன் முத்தமிழ்க் கவிஞ

னென்றிட வப்பெய ரியற்பெய ராக
நன்றென வாய்ந்த நாவலர் பெருமா
னத்தகு நூலி னருமையைக் கண்டே
சுத்தநல் லச்சிற் றுலங்க வைத்தனன்
தாளாண் மையனிற் றலைமை பூண்ட
வேளாண் குலத்தில் விளங்க வந்தோ
னெத்தகை யாரு மினிது பேசு
முத்தையன் பெற்ற முத்தென வொளிர்வோன்
பத்தியிற் சிறந்த பலரு மேத்துஞ்
சுத்த சைவத் தொன்மை மரபின
னன்பு கல்வி யடக்கஞ் சீல
பண்பு கருணை பதிந்து வாய்ந்து
சொல்லரும் புகழிற் றோன்றி வளரு
நல்ல சிவனென் னண்பன் றானே.

சிறப்புப்பாயிரமுற்றிற்று.

## சாத்துகவிகள்



உரையாசிரியர் மஹாவித்வான்

காஞ்சீபுரம் சபாபதிமுதலியாரவர்கள் குமாரர்

பாலசுப்பிரமணியமுதலியாரவர்கள்

இயற்றியது.



எழுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்.

சொற்பொருட்சுவை யமைந்ததோர்நல
சுசீந்திரத்தல புராணமாம்
பொற்புமிக்கிலகு நூலைநன்னிலம்
புகழ்செய்முத்தமிழ்க் கவிஞனும்
அற்புதத்திறெ டறைந்தனன்னதனை
யச்சிலிட்டுவெளி யிட்டனன்
சிற்பரன்றனருள் பெற்றநல்லசிவன்
பிள்ளையென்னவரு செல்வனே.



திருமயிலை வித்துவான் ஸ்ரீல.

## சண்முகம்பிள்ளையவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நீர்பூத்த வேணியனார் தாணுமா லயர்முக்க ணிமலர்மேய, கார் பூத்த பொழிலுடுத்த சுசீந்திரக்குப் புராணமொன்று கனிவாய்த் தந்தான், பேர்பூத்த முத்தமிழக் கவிவாண னதையாரும் பெட்பி னோட, வேர்பூத்த வெழுதாத வெழுத்திலிட்டா னல்லசிவ னெங் கள்கோவே.

---

ஸ்ரீமந் - முருகதாசசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

## தி-செ-சித்திரபுத்திரபிள்ளையவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூவருநான்முகத்தோனும்புருடோத்தமனுஞ்சிவனும்பொருளொன்றாகி
மூவருமாம்விதங்காட்டுஞ்சுசீந்திரத்தின்மான்மியத்தைமுறையதாக
எவருநன்கினிதுணரவொன்றையாயிரமாக்கியீய்ந்தான்விண்ணோர்
தேவருமேதினம்புகழுநல்லசிவன்கங்கைகுலதிலகன்றானே.

---

மஹாவித்வான் சித்தாந்த ரத்நாகரம் அரன்வாயல்

வேங்கடசுப்புப்பிள்ளையவர்கள் சோதரர்

## அ· தங்கவேலுப்பிள்ளையவர்களியற்றியன.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாவனையமடநல்லார்பூவனையைம்பாலினறுமணத்தேன்பில்கு ங், காவனையமனந்தபுரக்கோவனையும்புகழ்போலுங்கதிர்கான்மாட, மேவனையர்மகிழ்நரொடு மேவனகுபொருளிடனும் விளங்கவாழுந், தூவனையத்தொளிர்பைங்கூழ்ப் பாவனமிக்குடையநகர் சுசீந்திரத் துள். (க)

கற்புமணநாறுமுல்லைக்கொடியனையாளருண்ஞானங்கமழ்வைதி கப், பொற்புமிகுமத்திரிமாமுனிமுனியற்றருந்தவத்தாற்புணரப்பெ ற்ற, விற்புருவவாணுதன்மின்னரசெனுமோரசூயைவிரும்பிப்போ ற்றும், அற்புருவக்குழவிகண்மூவருமாகுந்தாணுமாலயர்செயாடல்.

பாடலெல்லாஞ்சொற்சுவையும் பொருட்சுவையுமலிந்தொழுகு
ம்படியேபாடி, வாடலிலாமுத்தமிழ்தேர்சுகுணனொருநாவல்லோன்
மண்ணோர்க்கீந்தா, னேடலரிந்நூற்சில்லோரெழுதாதவெழுத்தினி
லச்சிட்டாரேனு, நீடதனுட்பிழைதபுத்துததிருத்தமுறப்பதிப்பிப்
பானினைவுபூண்டு. (௩)

பணிவுமிகும்பண்புடைய நல்லசிவன்பிள்ளையென்போன்பரிந்
துவேண்டத், தணிவரைவாழ்வேற்கரனார்க்கன்பின்மிளிர்பாற்கரனே
ர்தக்கோன்முன்னூற், றுணிவுணருமெய்க்கல்வித்துறைபோயநிறை
தூயர்சூழுங்காட்சி, யணிவிளக்குமகம்போலுமுகமலர்ந்துபுகழுட
ம்புமவிரப்பெற்றேன். (௪)

அவைவிளக்குமறிஞர்செவி வாய்மடுப்பப்பிரசங்கவமிர்தமூட்
டுஞ், சுவைவிளக்குஞ்சித்தாந்தரத்தினாகரமெனவேதோன்றுஞான
ச், சிலைவிளக்குமுழுமதிவேங்கடசுப்புநாவலவன்றிருத்திநலகக்,
கலைவிளக்குங்கடலுலகிலச்சிட்டுவழங்கினனெக்காலுமவாழி. (௫)

---

சென்னைநகர்ப்பண்டிதை

## ஸ்ரீமதி - ம - மனோன்மணியம்மாள்

இயற்றியது.

---

எத்த்வத்தரும்பாவும் மும்மைமூர்த்திகளாகி யிவருங்காணு
விறையாகிநின்றதான் றனுமாலயவுருவ மெவாகருங்காட்டி

யித்தரையிலெழுங்கருளு மெழிற்சுசீந்தரத்தலத்தினிணையில்சீர்த்தி
யெவ்வுலகுநணிதேர்ந்து கொண்டாடியன்புருவா யினிதிங்கேதத

முத்தமிழ்நற்கவிராஜ னருங்கயிலைச்செந்தமிழின்முடித்துச்சொற்ற
முயங்கியபத்தியகத்திய புராணத்தருமைமுன்னைத்துன்னி

யுத்தமமுத்தையவே டவமனைத்துமேதிரள'வுதித்துவாழு
முயர்சைவன்மிகநல்ல சிவன்பிள்ளையச்சிட்டிங் குதவினால்.

---

உ

கணபதி துணை.

ஸ்ரீ தாணுமாலயன் றுணை.

# சுசீந்திரத்தலபுராணம்.

---

## விக்கினேசுரர் வணக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னுறு தவள வண்டின் முகம்பொரு கொம்பு மும்பர்
பின்னுற முன்வந் தெய்திப் பிரமருஞ் சலித்து வேதம்
பன்னுற வளிசூழ் கண்ணும் பரம்புதே னிரம்பு தாரு
மன்னுறு மெழில்சேர் தும்பி வதனனை வணங்கு வோமே. (க)

வேறு.

### தாணுமாலயன்.

பூமா துபொருந் தியமார் பினனு
நாமா துதிருந் தியநா வினனுந்
தாமோ தரனுஞ் சிவதா ணுவெனுஞ்
சீமா னைநினைந் துதினம் பணிவாம். (உ)

### உமையவள்.

இமையா சலமீன் றகுமா ரிசொலற்
கமையா வுலகந் தருமன் னைவிணோர்
தமையாண் முகிறங் கைசிவன் புணர்மா
துமையா ளையுவந் துதினந் தொழுவாம் (ங)

வேறு.

### விநாயகர்.

தேவரு முனிவருந் தெரிசித் தேத்துமம்
மூவரு மியற்றுமுத் தொழிற்கு முன்னமே
மேவருந் திறல்பெறும் வேழமாமுகன்
பூவரும் பதத்தையெப் போதும் போற்றுவாம். (ச)

### சுப்பிரமணியர்.

தேவயா னையைத்தினஞ் செயிர்க்கும் வல்லிநீ
தாவுமான் வயிற்றவ தரித்தி யென்றுபின்
மேவவேள் விமலையில் வேட்ட வேட்டுவப்
பாவைசேர் சரவண பவனை வாழ்த்துவாம். (௫)

### வேறு.

### சம்பந்தமூர்த்திசுவாமிகள்.

ஈன சம்பந்த மெய்துஞ் சமணுயிர்க்
கூன சம்பந்தஞ் செய்தோ னுலகெனுந்
தான சம்பந்தஞ் சைவமென் றாக்கிய
ஞான சம்பந்த னுமந விற்றுவாம். (௬)

### திருநாவுக்கரசுசுவாமிகள்.

தாக்குஞ் சூலைக்கி டைந்துச கோதரி
வாக்கு மந்திர மாக்கொண்டு வல்வினை
நீக்கு மாறு நினைவு சிவனிடத்
தாக்கு நாவுக் கரசனை வாழ்த்துவாம். (௭)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்.

எடுதத பேருல கெங்குமெள் ளெண்ணைபோற
றடுத்த நான்மறை யாதியை யாதியிற்
றொடுத்த காதற் பரவைமுன் றூதென
விடுத்த சுந்தரன் மெய்ப்பதம் போற்றுவாம். (௮)

### மாணிக்கவாசகசுவாமிகள்.

பூச கன்புகழ் பூசைகொள் வோனெனுந்
தேச கன்மகர்த் தாவின் செயலினாற்
பாச கன்மம் பறித்தசொன் மாணிக்க
வாச கன்றிருத் தாளை வணங்குவாம். (௯)

### தண்டியடிகள்.

தந்தை தாளைத் தடிந்தரன் ருளினிற்
சிந்தை பூண்டவன் சேடமுந் தாமமு
முந்த நாமமும் பெற்றருண் முற்றிய
வெந்தை யானதண் டீசனைப் போற்றுவாம். (௧௦)

வேறு.

**அடியார்கள்.**

சுத்தி யுள்ளநீ றணிந்தக்கு மாலிகை சூடிச்
சித்தி யுள்ளவ ராகியஞ் செழுத்தையுஞ் செவிக்குஞ்
சத்தி யுள்ளவ ராய்ச்சிவ தாணுவின் றாண்மேற்
பத்தி யுள்ளவ ரெவரவர் பாதமே பணிவாம். (௧௧)

பாயிரம் முற்றிற்று.



## புராணவரலாற்றுச் சுருக்கம்.



கலிநிலைத்துறை.

பாரும் வானமும் வரன்முறை யாவையும் படைத்துச்
சேரும் வாணியோ டகமகிழ் நான்முகத் தேவன்
சாருஞ் சத்திய லோகத்தி லமரர்மா தவத்தோர்
யாரு மேதொழப் பதுமபீ டிகையில்வீற் றிருந்தான். (௧)

இருந்த காலையில் முனிவரர் பலரும்வந் தீண்டிப்
பொருந்த யாந்தவஞ் செய்தரு மகம்பல புரிந்தே
திருந்த வோரிட மெவ்விட மெனவருள் செய்யென்
றருந்த வஞ்செயும் புங்கவ ரியம்பவங் கவனும். (௨)

விருப்ப தாயொரு தருப்பையை நேமியாய் விடுத்திக்
தருப்பை தான்சென்று தரித்தவெத் தானமத் தான
மிருப்ப தாமுமக் கெனவிறை யியம்பவவ் விறைவன்
றிருப்ப தாம்புயந் தொழுதது செல்வழிச் சென்றார். (௩)

சென்ற தம்புவி தனிலொரு வனத்திடை சேர்ந்தே
நன்ற தாமென நைமிச மமர்ந்ததந் நலத்தா
லன்ற தவ்வன நைமிசா ரணியமென் றறைய
நின்ற தெவ்வன மவ்வன் மொப்பதின் னிலத்தில். (௪)

கந்த மூலங்காய் கனிநனி கலந்தன கலந்தே
சந்த நாண்மலர் குழுமின கெழுமென தருப்பை
யந்த வேள்விசெய் சமிதையு நிறைந்தன வதனா
லிந்த நல்வனத் தெய்தவெத் தவஞ்செய்தோ மென்றார். (௫)

என்று மியாமிருந் திருந்தவ மியற்றுதற் கிடமீ
தொன்று மேகுறை வின்றென வருந்தவ முஞற்றித்
துன்று வேள்வியுஞ் செய்துவே தியர்வனஞ் சூழ்ந்தா
ரன்று மாதவச் சூதமா முனிவனுங் கணைந்தான். (௬)

சிவந்த மேனியில் வெளுத்தவெண் ணீற்றொளி திகழ
நிவந்த வார்சடை தாழ்தர வருபவ னோர்போய்த்
தவந்த வாதுசெய் மறையவர் வரன்முறை தாழ்ந்தே
யுவந்து தம்மிருக் கையிற்கொணர்ந் தாசன முதவி. (௭)

அங்கு நற்றவ னிருந்துழி யருக்கிய முதலாய்த்
தங்கு பூசனை வரன்முறை யியற்றிமா தவத்தோ
ரிங்கு நீவரப் பெற்றதெந் தவப்பய னென்னப்
பொங்கு மாதரம் புகன்றிட வாங்கவன் புகல்வான். (௮)

இற்றை நாள்வரை செய்தநற் றவப்பய னெனக்கின்
றுற்ற தாதலா லுங்கள்பா லடைந்தினி துவப்புப்
பெற்ற நானிதன் மேற்பெறும் பேறென்கொல் பெருமை
நற்ற போதன ரேயென முனிவரர் நவில்வார். (௯)

முன்ன ரேபதி னெண்புரா ணத்தையு மொழிந்தா
யன்ன மாபுரா ணங்கடோற் றியவர லாற்றை
யின்ன மும்விரித் துணர்த்துதி நீயெமக் கெனவே
சொன்ன மாதவர்க் குவந்துசூ தன்சொலத் தொடுத்தான். (௧0)

முனிவிர் காணன்று நன்றுநீர் மொழிந்தவம் முறையே
யினிதி யானுமக் கியம்புவ னுட்கொள்வீ ரென்னத்
தினிமு தற்பரா சரனெனு ஞானவான் றருவின்
கனியை நல்வியா தனைத்தியா னித்தனன் கருத்தில். (௧௧)

முற்ற வேநினைந் தொருமையா யிருகைமேன் முகிழ்த்துச்
சொற்ற நான்மறை யந்தணீர் கேண்மின்மெய்ச் சுருதி
கற்று ளோரும்வே தமுமின்றி முன்பிலோர் காலத்
தற்ற நூலெனத் தலைமயக் குற்றதிவ் வகிலம். (௧௨)

எம்ம தத்தினி லெய்தின ரம்மத மிதுவே
சம்ம தப்பொரு ளெனமதித் தறநெறி தவறி

வெம்ம தத்தினுன் மயங்குத லறிந்தருள் வேதன்
செம்ம லர்க்கணு னிவர்மழு வாளிபாற் சென்ருர். (கஙு)

புண்ணி யந்திரண் டெனத்திகழ் வெள்ளியம் பொருப்பி
னண்ணி யிப்பரி சுரைசெய விதழியி னறும்பூங்
கண்ணி யன்மலர்க் கண்ணனே நோக்கிநின் கலையி
லெண்ணி யோர்கலை பராசர முனியிடத் தெய்தி. (கச)

முந்தை யோசனை கந்தியோ டம்முனி முயங்க
மைந்த ஞகிநீ யவதரித் திடுதிமுன் மறைவா
மெந்த வேதமு முனக்கென தருளின் வந்தெய்து
மந்த வேதத்தை நால்வகை யாய்த்தொகுத் ததனல். (கரு)

போத மிக்கதோர் வியாதனென் ஞெருபெயர் புனைந்தவ்
வேத நான்கையும் வேதியர்க் குணர்த்திவெவ் வினைதீர்த்
தேத நீக்கிநீ மற்றைமூ வருணத்தா ரெவர்க்கு
மோத வேண்டுவ தின்னமோ ரருமறை யுளதால். (கசா)

மறைக ளங்கமா கமங்களங் கெவற்றினு மறைவாங்
குறைக டீர்த்திடு நினைத்தவை யாவையுங் கொடுக்கு
மிறைகொ ணூல்களு ளெமதியல் பாமது விதுவென்
றறைத ரிற்புரா ணங்களா மவற்றினை யந்நாள். (கஎ)

ஞான நந்திபா லுணர்த்தின முணர்ந்தவந் நந்தி
யான சீர்ச்சனற் குமாரனுக் களித்தன னவன்பாற்
ருன மோடுகேட் டிடுதிபின் னுத்தம தவத்தோர்க்
கீன மன்றியோ துதியறி வெவர்க்கும்வந் தெய்தும். (கஅ)

என்று கூறுதற் கிசைந்தன ரடியிணை யிறைஞ்சிச்
சென்று சேர்ந்தனர் தத்தம துலகினிற் றிருமா
லன்ற ரன்சொன்ன வாறுதித் தருமறை யனைத்துந்
துன்ற நால்வகைப் படுத்தினன் முனிவர்க்குச் சொன்ஞன். (ககூ)

வேறு.

சொற்றவந் நால்வரை நோக்கித் தொன்னெறி
நற்றவர்க் குணர்த்துதி ரென்று நான்மறைக்
கொற்றவ னருட்சனற் குமரன் முன்புசென்
றுற்றவன் சொற்புரா ணந்த னுட்கொண்டான். (உ0)

கொண்டனன் புராணத்தின் கூறுபாடெலாங்
கண்டன னெளியன்மேற் கருணை கூர்ந்துற
விண்டன னிக்கதை விரும்பிக் கேட்பவர்க்
குண்டென வுணர்த்துதி யென்ன வோதினான். (உக)

ஈதுமுன் னிகழ்ந்தவா றெனது தேசிகன்
பாதுகந் தலைமிசை கொண்டு பாரக
மீதுற விளம்பினன் விளங்கு கின்றவே
போதுமீ ரொன்பதாம் புராண மென்பவே. (உஉ)

அரன்றனக் கொருபதங் கரிக்கு நான்கயற்
கிரண்டனற் கொன்றுமற் றிரவிக் கொன்றதாம்
வரன்றரு புராணத்தின் வகையென் றுன்பரா
சரன்றரு வியாதனுந் தவத்தின் மேன்மையான். (உங)

காண்டகு சைவமார்க் கண்டங் காந்தஞ்சொற்
கூண்டிடு பௌடிக மிலிங்கங் கூருமாந்
தாண்டரு வராகம்வா மனமச் சம்பிர
மாண்டமென் றிவைபர மன்பு ராணமே. (உச)

காருடம் விண்டுபா கவத நாரதம்
பேரரி கயற்கதாம் பிரமம் பாத்மமே
யாரழற் காக்கினே யந்தி வாகரற்
கோர்தரு பிரமகை வர்த்த மென்பவே. (உரு)

மறைகளைச் சைமினி வைசம் பாயினர்
துறையறி பயிலவர் சுமந்திர நால்வர்க்கு
முறைபெற முன்னரே மொழிந்து பின்னெனக்
கிறையருள் புராணத்தி னியல்பி தாகுமே. (உசா)

வேறு.

என்னுஞ் சூதனை வேதமா தவரெழுந் திறைஞ்சி
மன்னு ஞானகா னனசுசீந் திரத்தல மகிமை
முன்னுங் கேட்டன மின்னமுங் கேட்பமா மோகந்
துன்னு மெந்தமக் கியம்புக வெனநனி துதித்தார். (உஎ)

ஆய்ந்த சீர்ப்பதி னெண்புரா ணங்களங் கவற்றிற்
காந்த மொன்றதிற் காண்டமா றவற்றிலோர் காண்ட

மேய்ந்த தாணுவை பவமிதிற் சுசீந்திரத் தியல்பாம்
வாய்ந்த மாதவத் தீர்களே கேண்மெனை வகுப்பான். (௭௯)

ஞான தீர்த்தமுந் தீர்த்தனு மத்திரி நலனும்
ஞான லிங்கமு மிலிங்கமா மரசுநற் றவத்தோர்
ஞான பூசையும் பூசைகொள் தாணுவு நடித்த
ஞான லீலையுஞ் சிறந்தது ஞானகா னனமே. (௮௦)

வேறு.

அத்திரிமா தவமகிமை யவன்பிரம சபையடைந்த தனசூயைப்பேர்
பத்தினிகற் பியன்மூவர் விரதநா ரதன்வருதல் பரம காட்சி
சித்திலிங்கோற் பத்திமுதன் மூவர்புரி பூசையோடத்திரிசெய்பூசை
சத்தவிரு டியர்வசிட்டா தியர்பூசை சங்கரமா தவன்செய்பூசை. (௮௧)

ஆறயிரா வதங்கொணர்த லரிதீக்கை யரிபூசை யறுமு கேசன்
கூறுகலி யாணகிரி மகிமைகங்கை வரல்கன்யா குமரி மேன்மை
யீறிலகத் தியன்பூசை மருத்துமலை மகிமைபர சிராமன் பூசை
தேறுமியற் சேரனுஞ்சோ ழனும்பாண்டி யனுமியல்பிற் செய்த பூசை. (௮௨)

அருள்பிரமோற் பத்தியொடு புன்னை வனமகிமை யகத்யன் பூசை
தருகருடன் பூசைகளா வதியினக் கிராலையமே சனகராதி
யிருடிகடம் பூசையக லிகைமகிமை யாஞ்ஞவற்க ரிறுதியாகப்
பரவவரு ஞானகா னனச்சருக்க முப்பதெனப் பகர்ந்திட்டானே. (௮௩)

புராண வரலாற்றுச்சருக்க முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௮௩.



## புராணவரலாற்றுச்சரித்திரம்.



பூலோகந் தேவலோக முதலிய வுலகங்களெல்லாவற்றையு முறைப்படி சிருட்டித்து சரஸ்வதி சமேதரா யகமகிழ்ச்சியுடன் பிரமா சத்தியலோகத்தில் சுரர்முனிவரியாவருந்தொழப் பதுமாசனத்தில் வீற்றிருந்தான். அப்படியிருக்குங் காலையி லிருடிகள் பலரும்வந்து தொழுது யாங்கள் தவம் யாகஞ்செய்து விருத்தியடைய, இவ்விடத்திலோரிட மெவ்விடம் அருள் செய்யுமென்று கேட்க; அவனும் விருப்பமாயொரு தெற்பையை வளையஞ் செய்து இது எவ்விடத்திற்றங்குகின்றதோ அவ்விடமுமக்கென்றருள; அவனது பாதத்தைத்தொழுது அங்நேமிசெல்லுமிடஞ்செல்லுகையில் அது பூமியில் ஒரு வனமத்தியிற் சேர்ந்தது. அவ்விடத்தை முனிவர் கண்டுநன்றென்று மகிழ்ந்து நேமிசம்பந்தத்தால் நைமிசாரண்ணிய மென்று பெயர்

கூறினர். மலர்,காய்,கனி,கிழங்கு,தருப்பை,சமிதைமுதலியவற்றுனிறைந்த தாலிதையடைய வெத்தவஞ்செய்தோ மென்றும், தவம் வேள்வியற்ற வி துவொன்றுமே குறைவற்றதென்றும், பலரும் அங்கமர்ந்திருந்தார்கள்.

அக்காலையில் மகாதவத்தையுடைய சூதமாமுனிவர் அவ்விடத்திற் கெழுந்தருள, சிவந்த திருமேனியில் வெண்ணீற்றொளி விளங்கவுஞ் சடை தாழவும் வருபவரெதிர்சென்று முனிவரர் வணங்கி, அவ்வனத்துக்கழைத் து வந்து ஆசனமுதலிய வற்கியபாத்தியத்துடன் பூசனை புரிந்து, மாதவமு டையவரே! தேவரீர் இங்கெழுந்தளப்பெற்றது எங்கள் தவப்பயனென்று தோத்திரஞ்செய்ய; அதற்குச் சூதமுனியு மிற்றைநாள்வரைசெய்த நற்றவ ப்பய னீங்கெனக்குற்றதா லுங்கள்பாலடைந்து இனிதுவப்பப் பெற்றேன்; எனக்கிதன்மேற் பெறும் பேறென்னையுளதென்றுகூற; முனிவரர் ஓர் சூத புராணிகரே! முன்னமே பதினெண் புராணத்தையு மவைதோன்றினவர லாற்றையு மருளிச்செய்தீ ரின்னமுமதை விரித்துணர்த்த வேண்டுமென க்கேட்கச் சூதர் சொல்லத்தொடங்கினர். முனிவர்களே! நீங்கள் மொழிந்தது நன்று நன்று யான் சொல்வதை யுட்கொள்ளுங்களென்று தனி முதலா ன பராசரனென்னும் ஞானவிருட்சத்தின் கனியானவியாதனைக் கருத்திற் றியானித்து மனமொற்றுமையுட னிருகரமுஞ்சிரமிசை குவித்துக்கொண்டு நான்குவேதங்களையுமுணர்ந்த முனிவர்களே கேளுங்களென்று சூதர் சொல் கின்றார். முன்னொரு கற்பத்தில் பூமண்டலமானது கற்றுளோரும் வேத முமின்றித் தலைமயக்குற்று எம்மதத்தோருந் தாமடைந்தமதப்பொருளே ச ம்மதப்பொருளெனமதித்து அறநெறிதவறி மதத்தினுன் மயங்குதலறிந்து பிரமாவும் விட்டுணுவும் புண்ணியமே யொருவடிவாய்த் திரண்டு விளங்கின துபோன்ற வெள்ளியங்கிரியை யடைந்து சிவபெருமானிடத்திலிதை விண்ணப்பஞ்செய்ய, அப்பரமபதி திருமாலைநோக்கி, பராசரர் யோசனைகந் தியோடு முயங்கையில் உன் கலையிலொரு கலையை மைந்தனுயவதரிக்கச் செய், அவனுக்கெந்த வேதமும் எனது அருளின் வரும், அதனை நாற் கூறு செய்த காரணத்தால் வேதவியாசனெனப்பெயர் பெற்று வேதியர்க்குணர் த்தி யவர்வினைகளைத்தீர்த்து மற்றை மூவருணத்தார்க்கும் அதனங்கமான ஆகமபுராணங்களிவற்றினை யாறுணர்த்திய நந்தியிடத்திற் பெற்ற சனற் குமாரன் பாலுணர்ந்து உலகத்துக்குணர்த்துவையாயின் எவர்க்கும் ஞானம் உதிக்குமென்றருள; அவ்விறையை யிறைஞ்சிதேவர்கடத்த மூலகிற்கேகி னர். இப்பாலரியும் வியாசனுயவதரித்து நந்திபரம் பரையில் மறைகளெவ ற்றையு முணர்ந்து எனக்குணர்த்திய புராணம் பதினெட்டினுள் சைவம்-மா ர்க்கண்டேயம்-காந்தம்-பௌடிகம்-இலிங்கம்-கூர்மம்-வராகம்-வாமனம்-மச்ச ம்-பிரமாண்டம்-சிவபுராணம் பத்தும். காருடம்-வைணவம்-பாகவதம்-நார தீயம் விட்டுணுபுராணம் நாலும். பிரமம்-பதுமம்-பிரமன்புராணம் இரண்டு



ரிஷ்யகிரிசாரலில் அத்திரிமுனிவர் தனமனைவிஅநுசூயையோடு விஷ்ணு பிரசன்னமாதல

C.V.N

ம். பிர்மகைவர்த்தமாகிய சூரியபுராணம்-ஒன்றும். ஆக்கினேயம் என்ற அக்கினி புராணம் ஒன்றுமாம். வேதங்களை சயமுனிவர் சம்பாயினருக்கும், அவர் பையிலவர்க்கும், அவர் சுமந்திரர் நால்வருக்கு முன்முறையே யுணர்த்திப் பின்னரெனக்குணர்த்தினரென்று சூதர் சொல்ல; மாதவரெழுந்திறைஞ்சிச் சுசீந்திரத்தலமகிமையை யாங்கள் முன்னங்கேட்டிருந்து மின்னங்கேட்க வாசையுற்றோம் தேவரீரெமககியம்ப வேண்டுமென்று துதித்தார். சூதர் மேற்கூறிய புராணம்-கஅ-ல்-காந்தசங்கிதையாறிற் றுணுவைபவத்திற் கூறப்பட்டுள்ள சுசீந்திரமகிமையை யானுங்கட்கியம்புவன் கேண்மினென்று அவற்றின் மகிமையை அத்திரி தவம்புரிசருக்கமுதல வியாக்ஞவற்கர் சருக்கமீருக முப்பது சருக்கமாக்கித் தொகுத்துக்கூறினார்.



## க-வது அத்திரி தவம்புரி மகிமைச்சருக்கம்.



### கலிவிருத்தம்.

பூங்கம லத்தயன் புதல்வன் பூதல
மாங்கவ னிவனென வயிர்க்குஞ் செய்கையா
னோங்கிய பிரணவத் துண்மை தேர்ந்தவ
னீங்கவ னன்மையா ரியம்புந் தன்மையே. (க)

ஆரண நான்கவற் றங்க மாறுசம்
பூரண வாகமம் புராண மேமுத
னாரண வரும்பதி னன்கு வித்தையுங்
காரணம் பெறநுணி தறிந்த கண்ணினான். (உ)

ஆறினை நூறியைந் தடககி நான்கிடை
யூறினை யொழித்துமூன் றுணர்ந்தி ரண்டினைத்
தேறினை வில்லதோ ரொன்றைத் தேர்ந்ததி
லேறின வறிவினோ டிருந்த தனமையான். (ங)

ஓயுமா றணவொழிந் துடலந் தூயனாய்
வாயுவை நிறுததி மேல் வழிகண் டப்புறத்
தாயுமோர வெளியினூ றமுத மேநுகர்ந்
தேயுநண் பொருளினின் றின்பந் துய்த்துளான். (ச)

ஆய்ந்திடுங் கற்பினுக் கரசி நல்லெழில்
வாய்ந்திடும் புண்ணிய வடிவு தன்மனத்
தேய்ந்திடு பன்னியோ டிருந்துஞ் சிந்தின்மேற்
றோய்ந்திடு பழுமென் றேடும் போன்றுளான். (ரு)

அறிவரு மரன்முத லான மூவரைக்
குறிவருஞ் சிறுர்களாய்க் கொள்ளும் பெற்றியா
னெறிவரு மாமறை நிலைகண் டந்நிலை
பிறிவரு மத்திரி யென்னும் பேரினன். (அ)

ஆயவன் பன்னியா யமைந்த ளாளொரு
தூயவ ளவடிறஞ் சொலற் பாலதோ
மாயவன் கதிர்மணி மார்பில் வைகிய
சேயவ ளாமெனச் சிறந்த செவ்வியாள். (எ)

ஏதுமுற் றுணர்ந்துதன் னிறைய ளுவெடுத்
தோதுமுன் குறிப்பறிந் துளுற்றும் பெற்றியாள்
போதுவிண் டொழுகுதேன் பொழிவ தேயெனப்
பேதுறு மொழியுடைப் பெற்ற தாயனுள். (அ)

எப்பணி புரிந்திடி னினிமை யெய்துமென்
றப்பணி செய்வதற் கன்பு பூண்டுளாள்
மெய்ப்பணி மாதவ னன்றி வேறுமற்
றெப்பணி தெய்வமொன் றுண்டென் றெண்ணிலாள். (கூ)

அருந்ததி முதலினோ ராய கற்புடைக
கருந்தடங் கண்ணியர் புகழுங் கற்பினுள்
பெருந்திறன் மழையவள் பெயயென முற்பெயுந்
திருந்துநல் லறமெனுந் தெய்வ மேயனுள். (க0)

மருமல ரடியிணை வருடி மாதவ
னிருவிழி துயின்றபின் றுயிலு மின்புளா
ளொருவனை நோக்குறு தொல்கும் வல்லிபோற்
பெருவிர னோக்கியே பெயரும் பெற்றியாள். (கக)

இறையவ னெழுமுன மெழுந்து தன்மனைப்
பொறையுறு தொழிலெலாம் புரிந்து பினபரு
மறையவர்க் கேற்றன வியற்றி மற்றவ
னறைகுவ தென்கொலென் றயிர்க்குஞ் சிந்தையாள். (கஉ)

ஆரனம் விரும்பினு ரவர்க்க ளித்துயிர்
சீரன தன்பதி நுகர்ந்த சேடமா
நீரன நித்திய மிசையு நேர்மையா
ளோரன சூயையென் றுரைக்கும் பேரினள். (கங)

ஆமவ ளோடெம்வர் தத்தி ரிப்பெயர்
மாமுனி யிமையமால் வரையின் பாங்கரிற்
ருமினி தியற்றினன் றவமத் தன்மைகண்
டேமுனக் தோன்றின னெழிலி போன்றுளான். (கச)

கார்நிறக் கண்ணனைக் கண்ணிற் கண்டெனத்
தார்வுறப் பெரிதவ னடியிற் ருழ்ந்து வீழ்ந்
தேர்நிறத் துடல்புள கெழும்பக் கண்கணீர்
வார்தரப் பற்பல சொல்லி வாழ்த்தினுன். (கரு)

அன்னவ னுங்கள்பா லன்பு கூர்ந்தன
மின்னநீ ரில்லறத் திருந்து வாழ்ந்துபின்
பின்னமில் பரகதி பெறுகு வீரெனச்
சொன்னமாற் கெதிர்முனி சொல்ல லாயினன். (கசு)

பொங்குவெங் கொடுவினை புரிந்து பூமியிற்
றங்குபல் யோனியாஞ் சரீர பேதங்க
ளெங்குமெங் கும்பிறந் திறந்து பேதையே
மங்குமிங் குஞ்சுழன் றலக்க ணுற்றனம். (கஎ)

எத்தனை சென்மமியா மெடுத்த சென்மமீண்
டத்தனை யுந்தவிர்த் ததிக சென்மமா
வைத்தனை யின்றுனை வணங்கப் பெற்றுளோஞ்
சித்தனை யாதருள் செய்ய வேண்டுமால். (கஅ)

ஆதலா னின்பத மாகு மம்புயப்
போதலான் மற்றொரு புகலி லோமென
வோதலா லுளமகிழ்ந் துமக்கு நற்கதி
யீதலா தொன்றுள தென்று கூறுவான். (கசு)

இருந்தவ ரெழுவரு மீங்கோர் தானத்தி
லருந்தவ மியற்றுகின் ருர்க ளாயிடை
பொருந்துவோ மாங்குநும் புதல்வ ராகியாந்
திருந்துவோம் பெறுவிர்பின் சித்தி முத்தியே. (உ0)

தாணுவே முதலியாந் தங்குந் தானம
தாணவ விருளினை யகற்றுந் தீபம
தேணுறு பரகதிக் கேறு மேணிய
தாணமு துடையவர்க் குறையு ளன்னதே. (உக)

தொல்வினைத் தொடர்வினை தொலைக்குந் தொன்மைசேர்
பல்வினைப் பகையினைப் பாற்று மாற்றிலா
நல்வினைப் பயனையே நல்கும் பல்கியே
வெல்வினைத் தபோதனர் மேவ மேவுமே. (உஉ)

மருவளர் தீர்த்தங்க ளனேக மாகம்போன்
றுருவளா மூர்த்திக ளனேகம் யோகர்வாழ்
தருவளர் சோலைக ளனேகஞ் சந்ததம்
பெருவளந் தருமதற் கெல்லை பேசுவாம். (உஙு)

நந்தலில் காசிநன் னகர்க்குத் தென்றிசை
யந்தமா மலையெவற் பதற்குத் தெற்குற
வந்ததென் கடற்குநேர் வடக்க தாய்வளந்
தந்தபூ தலஞ்சொலச் சார்ந்த தத்தலம். (உச)

அத்தலந் தனக்குநே ராகப் பாரகத்
தெத்தல மியானுமவ் விருவ ரும்பயின்
முத்தல மதுமறை முனிவ கேட்டியுன்
கைத்தல நெல்லியங் கனியிற் காண்டியால். (உரு)

ஞானகா னனமெனு நாம மன்னயிற்
கானதோர் வடக்குமேற் காக வங்கொரு
தானமாம் யாகதீர்த் தருமத் தீர்த்தத்தின்
றேனவங் கரையிலோ ரரசுஞ் சேருமால். (உசா)

முடியுடை மூத்தொழின் மூவ ரும்மதற்
கடிநடு முடியென லாகு நற்றளிர்க்
கடிமலர் முதலிய கடவு ளோர்கடம்
வடிவது பிரணவ வடிவ தாகுமால். (உஎ)

மாசிலா வரசுசின் மயம தாகுமியாம்
பேசிலோ பெரிததன் பெருமை நீவிர்போ
யாசிலா வவ்விடத் தமர்ந்தந் நீழலிற்
றேசிலாச் சிரமஞ்செய் திருத்தல் செய்திரால். (உஅ)

என்னவே யத்திரி யியம்பு வான்முனஞ்
சொன்னதா னத்தியல் சொற்று ளாயவன்
முன்னமா தவஞ்செயேழ் முனிவர் தன்மைசெம்
பொன்னவா மார்பநீ புகல வேண்மொலீ. (உகூ)

என்னுமத் திரிக்கரி யியம்புமுன் போர்காள்
மன்னும்வெள் ளியங்கிரி வரத னெம்மொடுந்
துன்னும்வே தனெடுந் தோற்றுங் காட்சிய
துன்னும்வா னவர்க்கினி துதவ வானவர். (௩0)

இயம்புவர் நுங்களை யெம்ம னோர்களே
நயம்பெற வேத்துத லன்றி நாதர்நீர்
பயன்பெற வேத்தவெற் பவர்கள் யாரெனச்
சுயம்பெற வுளாதன மவர்க்கத் தொன்மையே. (௩௧)

வேறு.

வந்த பூசைபூ சகர்கொள்வோ ராகுமூ வருமியா
மிந்த வாரறி வீர்புல வீரென விசைபதோ
மந்த வேளையேழ் முனிவரங் கநனையா மறியச்
சிந்தை கூர்ந்தருள் செயுமென வெமைத்துதி செயவே. (௩௨)

எம்மை யாந்தியா நிப்பதும் பூசைசெய் தேற்குஞ்
செம்மையானதுங் காட்டுது நீவிர்தென் றிசைபோய்
வெம்மை நீங்குறு ஞானகா னனத்திடை மேவி
மும்மை யெந்தமைச் சிந்தைசெய் தருந்தவ முயல்வீர். (௩௩)

அங்கு மேன்மையத் திரிமுனி யடைவனங் கவன்பாற்
றங்கு பாலராய் மூவரும் வந்தவ தரித்து
மங்கு ருதச தாசிவ லிங்கத்தில் வதிந்து
பொங்கு பூசைசெய்வோங்கொள்வோ முழுதுமெப் பொழுதும். (௩௪)

ஆய நாள்வரு காறுமங் குறைதிரென் றறைய
வேய நாளிலாங் கேகின ரிருந்தவ ரீன்ற
தாயனு ளொடாங் குறுதியீ துறுதிவே தஞ்சொல்
வாய னுதிமூ வர்களுநும் புதல்வராய் வருவோம். (௩௫)

முற்றிற்று.



## க-வது அத்திரிதவம்புரி சருக்கத்தின் சுருக்கம்.



பிரமாவின் புதல்வனும், அவனேயென்றுலகமையப்படுஞ் செய்கை
யானும், பிரணவத்துண்மை தெரிந்தவனும், நான்குவேதம் ஆறங்கம்பதி
னெண்புராணம் இருபதெட்டாகமம் அறுபத்துநாலு கலைஞானங்களையு
முணர்ந்த வுணர்வினனும், காமாதியாறையுந் தள்ளியைம்புலனடக்கி யந்
தக்கரணத்தை நீற்றிச் சகசீவபரமுணர்ந்து பந்தமுத்தியைத்தெரிந்து ஏக
மாகிய பிரமத்தைக்கியமாய் அது மாத்திரமாய் விளங்குந்தன்மையனும்,
உணவொழிந்து சுத்த சரீரவானாய் வாசியையடக்கிப் பிரமரந்திரங்கடந்து
அதற்கப்பாலிலங்கும் பரவெளியிலூறு மமிர்தத்தையுண்டு நுண்ணியவஸ்து
வோடின்பந் துய்த்துள்ளவனும், கற்பினுக்கரசியும் அழகு வாய்ந்த புண்
ணியவடிவமே தன்மனத்தொளிரு மனைவியோடிருந்தும் புளியம்பழந்தோ
டு போலிருப்பவனும், அயனரியரனாகிய முத்தேவரையுந் தனக்குச்சிறார்க
ளாய்க்கொள்ளும்பெற்றியையுடையவனும், அரியவேதத்தி நிலையைக் கண்
டவனும், ஆகிய அத்திரியென்னும் பெயரையுடைய வொருமுனிவனிருந்
தான். அவன மனைவி பரிசுத்தமுடையவளும், அழகிலிலக்குமியை யொத்த
வளும், எதையும் நாயகன் சொல்லுமுன் முற்றுமுணர்ந்துசெய்யும் பெற்றி
யுள்ளவளும், தேன்மொழியாளும், தாயையொத்தவளும், எதுசெய்யினாயக
னின் புறுவானோ அதுசெய்வதற்கன்பு பூண்டுள்ளவளும், கணவனையன்றி
யோர்கடவுளுண்டென்றெண்ணிலாளும், அருந்ததி முதலியோர் புகழுங்
கற்பினாளும், பெய்யென்றான்மழை பெய்யுந்திறமுடையவளும், தருமதேவ
தையொப்பவளும், நாயகன் கால்பிடித்து விழிதுயின்ற பின்றுயிலுமின்ப
முடையவளும், ஒருவரையு நோக்காது பெருவிரலை நோக்கி நடப்பவளும்,
இறையவனெழுமுன்னெழுந்து வீட்டைப்பொறுத்த தொழிலெல்லாம் புரி
ந்துமறையவர்களேற்பன வியற்றி நாயகனைறைவதேனோ வென்றையுறுஞ்
சிந்தையுடைவளும். நாயகனுண்ட சேடமுண்ணு நீர்மையுடையவளும்,
அனசூயையெனனும் பெயரையுடையவளுமாம். அவடிறம் சொல்லற்பால
தோ! அவளோடு மத்திரி முனிவன் இமோற்பருவதத்தோர் பக்கத்திற்றவ
மியற்றினமை கண்டு விட்டுணு பிரசன்னமானார். அவரை வணங்கி அவர
டியிற்றாழ்ந்து வீழ்ந்தெழுந்துடல்புள கெழக்கண்ணீர்வாரப் பலதோத்திர
ம் புனைந்தார். அரியுமுங்கள் பால் அன்புகூர்ந்தனம நீரின்னமில்லறத்திரு
ந்து வாழ்ந்து பின பின்னமிலலாத பரகதிபெறுவீரென்று அருளியமாலைப்
பார்த்து முனிவர்சொல்லுகிறார். தீவினைபுரிந்து பூமியிற் பலயோனி பேத
ங்கடோறும் பிறந்திறந் தங்கு மிங்குஞ் சுழன்ற லசனுற்றனம்; யாமெத்
தனை சென்மமெடுத்தும் அத்தனையுந் தவிர்த்து இதனையதிக சென்மமாய்
வைத்தனை; ஆகலின் உன்னை வணங்கப் பெற்றுளோம். சிததுள்ள புத்திர,

னை யருள்வதற்கு நின்பதாம்புயப்போதல்லால் மற்றொரு புகலிலோம் என்று கூற; அரியுளமகிழ்ந்து உமக்கு நற்கதியீதல்லாமல் மற்றொன்றுளதென்று கூறுவார். பெரிய தவமுடைய சத்த ரிஷிகளுமிங்கோரிடத்திற்றவமியற்றுகின்றார். அவ்விடஞ்செல்வேம் அங்கே நம்புதல்வராகி மூவரும் வருவேம் நீர் பின்னர் சித்தி முத்தி பெறுவீர். தாணுமுதலியயாம் வசிக்குந்தானமும், ஆணவவிருளையகற்றுந்தீபமும், பரகதிக்கேறு மேணியும், ஊனுள்ளவர்க்குறைவிடமும், பழவினையையும் தொடர்வினையையும் பல்வினைப்பகையையுந் தொலைக்குமிடமும், நல்வினைப்பயனை நல்குமிடமும், வினைகளை வென்ற தபோதனர் மேவுமிடமும், அநேகந்தீர்த்தங்களுள்ளதும், அநேக மூர்த்திகளுள்ளதும், யோகியர் வாழிடமும், அநேகஞ்சோலைகள் சூழ்ந்தது மான பெரிய வளம்பொருந்திய வவ்விடம் காசிக்குத்தெற்காம், பொதிய மலைக்குத் தென்பாலுள்ள கடலுக்கு வடக்காம், அத்தலத்துக்குச் சமான மெத்தலமுள்ளது; யாமுமந்த விருவரும் வசிக்குமத்தலமுமது; அதற்கு ஞானகானனமென்று பெயராம். அதன் வடமேற்காக யாகதீர்த்தமும் தென்கரையில் ஒரு அசுவத்தவிருட்சமுமுளதாம். முத்தொழிலுள்ள மூவரும் அதற்கடி நடுமுடியாம் மற்றத்தேவர்கள் தளிர்மலர்முதலியவாம் அதனடிவு பிரணவசொரூபமுஞ் சின்மயசொரூபமுமாம். பெருமைபொருந்திய நீவிர் அந்நிழலிலாச்சிரமஞ்செய்து வசிப்பீரென்றருள அத்திரிமுனிவனைத் தலத்தியல்பையருளினீர் அவ்விடத்தில் சத்தரிஷிகளின்றன்மையை யருள்வீரென ஆழியான்முன்னொருகாலத்தில் அரன் என்னோடும் அயனோடும் தேவர்கட்குக் காட்சிகொடுத்தருள அவர்கள் மும்மூர்த்திகளாகிய உங்களை யெம்மனோர்களே யேத்துதலன்றிபலன்பெற வேத்தவேற்பவராரென்று கூறுவதற்குச் சுயஞ்சொரூபத்தைப்பெற முன்னுள்ளபடியே மவாகசருளி பூசை, பூசகர் பூசைகொள்வோ ரிம்மூவருமியாமேயென்று இந்தப்பிரகாரமறிவீர் புலவர்களே யென்றருள; அக்காலை யெழுமுனிவர்களும் அவ்விடத்தனையறியச் சிந்தைகூர்ந்து அருள்வீரென்று தோத்திரஞ்செய்ய; அரியும் எம்மையாந்தியா நிப்பதற்கும் பூசைசெய்வதற்கும் செம்மையான தலத்தைககாட்டுதும்: நீவிர் தெற்கே ஞானகானனத்தை யெய்தி மூககாலத்திலு மெம்மைத்தியானித்து அருந்தவம்செய்வீர் அவ்விடத்து அத்திரிமுனிவன் பால்யாமூவரும் பாலராயவதரித்துச் சதாசிவலிங்கத்திடைவதிந்து, எப்பொழ்தும் பூசைசெய்வோம் கொள்வோம் ஆதலின் அக்காலம் வரும்வரை அங்கிருப்பீரென்று அருளியவாறு வதிகின்றார்கள். அத்திரிமுனியே நீரும்தாய்க்கொப்பான வனசூயையுடன் அவ்விடத்திற்போயிரும் யாமூவரும் பாலராய் அங்குவந் தவதரிப்போம் என்றருளிமறைந்தனரென்று சூதர் நைமிசாரண்ய முனிவருக்குச்சொன்னார்.



# உ-வது அத்திரி பிரமசபையிற்சென்றசருக்கம்.

## கலிவிருத்தம்.

*என்றன னகன்றன னிமைய வெற்பைவிட்
டன்றனி சூயையோ டரிய மாதவன்
சென்றனன் ஞானகா னத்தைச் சேர்ந்தவ
ணொன்றின வளனெலா முற்று நோக்கினன். (க)

## வேறு.

அரசினையெ திர்ந்துவலம் வந்தருக தாக
கரைசெய்மக வாவியுறல் கண்டுகளி கொண்டான்
விரைசெய்வன மீதலது மேதகவு டைத்தா
யுரைசெய்வன வொங்குமிலை யென்றுளமு வந்தான். (உ)

தருப்பைகள்ச மித்துகட ருக்கள்கனி காய்கள்
விருப்புறமி குத்தனவெ னததனிவி யந்தான்
மருப்பெருகு சாலைசெய்து மங்கையிவ ளோடிங்
கிருப்பதுசி றப்பெனவி யந்தவணி ருந்தான். (ங)

தவமுனிவர் செய்தனர்கள் சாலைதழை யாலே
யவனுமன சூயையொடி தாமெனவ மர்ந்தான்
சிவதவமி யாகமிவை செய்துசில கால
முவகையொடு மாமுனிவ ரோடினிது றைந்தான். (ச)

வேதனுல*கத்தவனோர் வேள்விபுரி கிற்பா
னோதுமர னேமுதலி னோரவண டைந்தார்
போதிலயன மாலினொடு போதமுற வேள்விக்
கேதமில்ச டங்குசெய்வ தியார்மொழிதி யென்றான். (ரு)

என்னுமனை வத்திரியெ னும்பெயரி னன்வான்
மின்னவுயர் ஞானவன மீதிலுறை கின்றா
னன்னவனை யிங்கினித ழைதகிடென வன்னோ
னுன்னுமுன மங்கவனு ணர்ந்துநகை செய்தான். (சா)

எதிவண கைத்ததென வேமுனிவர் கேட்ப
வேதனுல கத்தில்வர வேயெனைநி னைத்தா
னாதலின கன்றிடுவ னென்னவன சூயை
காதலின டுங்கினள்பி றிந்திடுகெ ருத்தால். (எ)

ஆயிடைய டைந்திவண டைந்திடுதல் காறு
நீயிவணி ருத்தியுனை நீங்கவரி தென்னத்
தூயவன சூயையெதிர் சொல்லரிது வல்லே
யேயுமென தன்புநினி டத்திலுள தென்றம். (அ)

என்றபொழு தேயடியி றைஞ்சியிரு தாண்மீ
தொன்றியநன் னீர்முனிவ னுண்டவன சேடந்
துன்றுவகை கொண்டவன சூயைதொழு திங்ங
னின்றனள கன்றனனன் னேயமுனி யங்ஙன. (௯)

தொடருமுனி வோர்களொடு தூயவன சூயைக
கிடரறவெ லாமினிதி யறறுதிரொ னச்செரற்
றடாவனமி கந்தவய னுலக டைந்தான்
மடவரலு மோர்தனிவ திநதனள்வருந்தாள். (௧௦)

வேதமுனிபாதசல மிச்சிலது நுய்ததே
யேதமற வங்கினிதி ருக்குமவள கற்பாற்
கேதமறு காய்கனி கிழங்குமுத லாய
பேதவகை யெங்கணுமி குதரனபெருத்தே. (௧௧)

ஒருகுறையு மின்றிமுனி வோர்குறைவில் சாலை
கருகுறையு நங்கையவ ளங்குறைதல் செய்தாண்
முருகுறைச ரோசன்மக முந்துகிலின் முந்தும
பெருகுறையு ளுற்றமுனி பெற்றிசொல வற்றே. (௧௨)

வேறு.

வருந்த லின்றிய னோயதி யெய்தியங்
கிருந்த மூவரைக் கண்ணுற்றி யாவரும்
பொருந்தும் யாகச பையிற்பொ லிந்ததோ
ரருந்த வற்கண் டதிசயித தானரோ. (௧௩)

எதில் மானிட யாக்கைகொண் டெய்திய
வாதி ருத்திர னுங்கொ லழற்கிறைச்
சோதியாகுங்கொ லென்று கருதியி
னீதி யோர்சொல நின்றுரை செய்குவான். (௧௪)

ஈண்டு வேள்வி யியற்றுதற் கேற்றன
தேண்டும் வேதநின் சேவடி தாழ்ந்தயான்
வேண்டுந் தன்மைய தென்னென வேள்வியிற்
பூண்டு முற்செய வீசெய்து போதியால். (௧௫)

என்ன வேபுல் லெடுத்தவன் கையிலீய்ந்
தன்ன வேகொண் டொருதிரு மாலடி
பொன்ன வர்முடிப் பெய்த பொழுதவண்
மன்னும் மானவர் வாழ்த்தத் தொடங்கினர். (கசு)

துடங்கி வேதஞ்சொ லும்படி யேமுதற்
சடங்கு செய்தவி தானக் கடவுளோ
ரடங்க லீய்ந்தவ ராசியி யம்பவே
திடங்கொண் மாதவன் சிந்தை யுவந்தனனே (கஎ)

அத்தி ரிக்கு மரனுக்கு மாலுக்குஞ்
சித்தி ரத்தவி சிட்டபின் சீர்பெற
வைத்தி ருக்கு மறையோன் மறைசொலு
மித்தி றததுப சாரஞ்செய தேத்தினன். (கஅ)

அந்த வேளை யமரர்க் கிறைவனோர்
சந்த வேள்விசெய் வானவன் றனதறி
விந்த மாதவ னைக்கொடங் கேகவே
முந்த வேள்வி முயன்றங் கிருந்தனன். (கசு)

அண்டர் கோன்செயும் யாகத் தடைந்தவி
யுண்ட மூவரு மூற்ற யேறுருக
கொண்டு மேருக் குலகிரிக் குத்தர
கண்ட மீதுறைந் தார்சில காலமே. (உ0)

உறைந்த மூவரு ளத்தன சூயைதன்
னிறைந்த கற்பை நிறுதநிட நீண்முகில்
சிறந்த நாவலந் தீவிற் செலாதறந்
துறந்து சொல்லத் துணிந்தனர் சூட்சியால். (உக)

முற்றிற்று. ஆக. திருவிருத்தம். ௱௬



## உ-வது அத்திரிபிரம சபையடைந்த சருக்கத்தின்சுருக்கம்.

நைமிசாரண்ய வாசிகளைப்பார்த்துச் சூதர்சொல்கின்றார்; விட்டுணு அருளினமாத்திரத்தி லத்திரிமகாரிஷி அனசூயையுடனிமையபர்வதம் விட்டு ஞானகானனம் அடைந்து அதிலுள்ள சிறப்பனைத்தும்பார்த்து அரசினையும் அதனருகுள்ள ஞானதீர்த்தத்தையுங் கண்டுகளிகூர்ந்து, இவ்வனத்துக்கொப்பாக வொருவனமெங்கு மின்றென்றகமகிழ்ந்து; தருப்பை சமிதை தருகாய் கனிமிகுந்திருக்கின்ற தெனவியந்து மற்றமுனிவர்களாச்சிரம மியற்ற மனையவளோடும் செபம், தவம், யாகம், இவை செய்து முனிகணங்களோடு

சில காலமகிழ்வாயங்கிருந்தான். இப்படி யிருக்கையிற் சத்தியலோகத்திற் பிரமன்வேள்வி யொன்றியற்ற அதற்கு அரன்மால் முதலோர் அவ்விடம் சென்றார்; அக்கால் அயன்மாலைப்பார்த்து வேள்விச்சடங்கு செய்வதியார் உரையென; ஞானகானனத்தத்திரி முனிவனிருக்கிறா னவனேயிங்கழையென; அந்நான்முகனினைக்கு முன்னம் இம்முனிவனறிந்து, நகைகொள்ள, அடுத்திருந்த முனிவர்முறுவலித்த தென்னவென்றுவினாவ, மான் மகன்றன்னிடம் வரவுன்னினன் செல்கின்றேனென, நாயகன் பிரிவுணர்ந்த அனசூயை காதலினடுங்கினள்; முனிபான்அவன் போயிவண்வருகாறு நீயிங்கிருவென, அவள் உம்மைப்பிரியவரியதென்று கூற; தவசியும் பரிசுத்தமுள்ள அனசூயையெதிர்சொல்வ தரிதென்றுன்னி சீக்கிரமிவ்விடம் வந்துசேருகிறேனதுவரை யெனதன்பு நின்னிடத்தேயுளதென்றுமொழிய; கேட்டபொழுது துணையன்றொடொழுது பாததீர்த்தமும் பரிகலப்பிரசாதமுங் கொண்டிங்ஙன நின்றனள். உடனேயருகினின்ற முனிவரை நோக்கியனசூயைதுன்பமற வெல்லாமியற்றுதி யென்று கூறிபயணுலகடைந்தானு. மடவாலும் பிரிவின்வருந்தித் தனிவசித்தாள். பாததீர்த்தமும் உச்சிட்டமுந்துய்த்திவள் வசிக்குங்கற்பாற் காய் கனி கிழங்கு முதலிய பேதவகையெங்கணும் பெருத்து மிகுத்தன, முனிவரது பலசாலைகளருகுறைதலா னொருகுறையுமின்றியங்குறைந்தாள். இஃதிப்படியிருக்க அத்திரிமுனிவன் வருத்தமின்றி மனோவதிநகரத்தையடைந்து அங்கேயிருந்த மூவரைத்தரிசித்துயாவரும் பொருந்துமியாகசாலையிற் சென்ற வருந்தவனைக்கண்டு எவருமதிசயித்தார். இம் மானிடயாக்கை தரித்தவனுதிருத்திரனோ அழற்கடவுளின் சோதியோவென்று வேதவேதியர் கூறினர், முனிவன் வேள்வியாற்றுதற் கேற்றனதேடும் வேதனே நின்னடித்தொண்டியற்றுமியான் வேண்டுந்தன்மயதென்னென அவர் யாகத்திற் செய்யவேண்டுங் கிரியையனைத்து நீ செய்தியென்று தற்பையைக் கையிற்கொடுக்க, அதை யேற்றுத்திருமாலடியினுந் தேவர்கண்முடியினுஞ் சாத்தினபொழுது சுரர்வாழ்த்தினர் வேதகோஷமுழங்கயாக முதற்சடங்குசெய்து கடவுளர்க்கு அவிசளித்தான். அவர்களும் ஆசி கூறவுளமகிழ்ந்திருந்தனன். அத்திரி அரன் அரியிலர்க்குச் சிததிராசனம் விரித்து அதிலெழுந்தருளச்செய்து வேதன்வேதமுறையினுபசரித்தான். அப்பொழுது இந்திரன் ஒருவேள்விசெய்ய அவன்றனத்திலிந்த மாதவனைவைத்து மகமியற்றி மூவர்க்குமவியீதவ அதனைக்கொண்ட மூவரும்ஊறுற வேறுருக்கொண்டு மேருவுக்குத்தரதிசையில் உறைந்தார். அங்ஙனமுறைந்தவர் அனசூயையின் கற்பை நிலைநிறுத்த நினைந்து நாவலன்றீவிலோ ருபாயத்தால் மழை பெய்ய மேகஞ்செல்லாமல் அறம் துறந்து செல்லத்துணிந்தனர் என்று சூதர்சொன்னார்.

முற்றிறறு.

## ௩-வது அனசூயை கற்புமகிமைச்சருக்கம்.

### கலிவிருத்தம்.

என்று சூத னியம்புதல் கேட்டிது
நன்று பின்னர் நடந்தவெல் லாமினி
இன்று கேட்கவி யந்தன மாதவக்
குன்று போலபவ கூறெனக் கூறுவான் (௧)

### வேறு

ஆதலிற்தல மேருவுக்கய லாயதெக்கண திக்கெலாஞ்
சீதமுற்றுச லாசமைபபுயல் சேர்விலாதுதண் ணீரிலா
தேதமுற்றண வானதற்றுயிர யாவுமங்குகி லாதுகாா
மீதுறப்பெய ரேதேது திகலெனவே கினோநதுதள் ளாமெமால். (௨)

போகமற்றன பூசையற்றன புனிதமற்றன மனிதர்சூழ்
மோகமற்றன ராகமுற்றின முறையுமற்றன முனிவாபால
யோகமற்றன யாகமற்றன வுரனுமற்றன மரமெலாஞ்
சாகமற்றன வேர்களற்றன சலமதற்றன நிலமெலாம் (௩)

குளம்வறந்தன நதிவறந்தன கூவல்வற்றின பூவிலோர்
களம்வறந்தன நாவறந்தன கருவறந்தன வுருவுறு
துளம்வறந்தன வுடல்வறந்தன வுயிர்வறந்தன பயிரில்வாழ்
வளம்வறந்தன மழைவறந்திடில யாவைபோவற ளாதவே. (௪)

அன்னகாலையி லன்னமேயரி சாகியேதனி காயகிற்கு
இன்னபோகமு மின்றியாமினி பெங்ஙனேகுவ மென்றுமுன்
றுன்னுமாதவ ரியாவருமபெற துயரறிநதன சூயைதன்
பன்னசாலையி னூடுறைநதொரு பண்புசெயதன ணண்பினால். (௫)

நிறைதவததின னடிவிளக்கிய நீரையேகையி லேயெடுத்
திறைவனைத்தன திதயமததியி லேயிருததிநி தானியா
முறைகொண்மைப்புயல் பொழிகவெனசனு முன்புபோன்மிக வின்பமே
குறைவறப்பெருகுகவெனததனி கூசிடாதுற வீசினள். (௬)

ஆறிரண்டெனும் யோசனைகளுளண் ணரியமாமழை சொரிகெனக்
கூறிவிண்டநன் னீரொழுங்கெழு கொண்டலாய்நிரை கொண்டதோ
தேறுகின்றில மூவருமசெய்த திறமகற்றிய திறலினை
வீறிலண்பினர் கற்பினுக்கெதி ரியலுமோவெவர் செயலுமே. (௭)

மங்கைகற்பெனு மேன்மையாலுயர் மழைபொழிந்திடு பான்மையாற்
பொங்குகற்கனி காய்கிழங்கொடு சாகமும்பல போகமு

No 3.



வனத்தில் அனுசூயையால் நீர் தெளிக்க
மேகம் பொழிதல்

ITH: BY C. R.



கிழப்பருவங் கொண்ட மூவருக்கும்
அனுசூயை அன்னமிடுதல் —



அனுசூயை மூவரையும் குழந்தைகளாக்கி
தாலாட்டுதல்

C. V. N.

மெங்குமற்புத மேமிகப்பசி யேவளர்ந்துட லேதளர்ந்
தங்கிளைத்தவ ரெவருமிங்குற லாயினுரிடர் போயினுர். (அ)

வந்தமெய்த்தவ ருக்கெலாமதி வாசசந்தன சீதளந்
தந்துடற்றளர் வாறவீசுறு தால்பிருந்தம தாலவே
யுந்துமுக்கனி பால்சருக்கரை யோடளைந்துவி டாமலுண்
டந்தமுற்றிட வன்னமிட்டன ளாயையொத்தன சூயையே. (கூ)

அங்கடைந்தவ ருக்கெலாமரு ளன்னபூரணி யென்னவே
சங்கடந்தவி ரச்செயதிங்கிவ டங்குமேல்வையின் மேருவின்
பங்கடங்கிய மூவருமுனி பன்னிதன்செய லுன்னியே
யிங்கடங்கரு மாடலேசெய வேயினுர்கிழ மாயினுர். (கப)

வேறு.

தடியோடு தடுமாறித் தளர்ந்துமூப் பிளந்நுநடை தத்திப்பொத்தி
முடியோடவ் வுடனைத்நு முகமும்வலித் துச்சுரிததி முக்கிக் கக்கிப்
பிடியோடன் புந்நரம்புந் துன்னநூன்மார் பின்முன்ன மேனிகூனி
மடியோடு பசிகனற்ற மறைக்கிழவ ரறக்கிழமாய் வந்துற்முரால். (கக)

வந்துபன்ன சாலையிலார் பசிகொடிதென் றுழன்றுரைக்கும் வார்த்தை
தான்கேட், டந்தவன்னை வெளியில்வரக் கண்டிளைப்புந் தவிப்புமிகு் நவ
சமாகச், சிந்தைபயந் தெடுத்தன்னோர் மூர்ச்சைக்கேற்றனுகொடுத்துத் தேற்
றத் தேற்றந், தந்தபின்ன ரடிவிளக்கி யாசனமிட் டிருத்தியுப சாரஞ்
செய்தே. (கஉ)

இன்னபாத் திரங்கிடையா தெனமனம்பற் றிடப்பொசிக்கு மிடந்தாய்
தாக்கி, யன்னபாத் திரம்விளக்கி யறுசுவையுண் டியுமுறைபோ டமைத்துக்
கைமேற், சொன்னபாத் திரநீவிட் டமுதுசெய்யு மென்னவன்னை சொன்
னசொல்லின், பின்னபாத் திரராகி மூவரும்பே சாதவுணா பேசினுரால். (கங)

உடுத்ததுகி லகற்றிலுண்போ மன்றேலுண் ணேமெனவன் றேநக் காதி,
லடுத்தபொழு தாகரவென் றஞ்சியின்னன் மிஞ்சியுன்ன லாமோநீவி,
ரெடுத்தமொழி புன்மொழிநீ திநுகேட்க வெனக்குவிதி யின்றுநன்று,
கொடுத்தவன்னம் பொசித்துநன்மை கூறுவதுந் தன்மையென்று கூறும்
போது. (கச)

எமதுமொழி கேட்டிலையே லுண்ணேமின் றுயிரிழப்போ மென்னவன்
னோர், தமதுமொழி கேட்டிதுவோர் சோதனையோ வெனமனதிற் றூக்கி
நோக்கி, யுமதுகருத்தெப்படியோ வப்படியே முற்றுமிங் துண்மையாமென்
றும்மதிபெறத் தன்கணவன் பாததீர்த்தத்தையெடுத் தங்கைகொண்டாள்.

**வேறு.**

என்னிறை யெனதுளத் திருக்கு மென்னிலென்
முன்னிறை யவரிவர் மூவ ருந்திரு
மெய்ந்நிறை சிறூர்களாய் விடுக வென்றுதங்
கைந்நிறை புனலைச்செங் கரத்தில் வீசினுள். (கசு)

வீசின பொழுதற வெட்கி யுட்கியுட்
கூசின பேரெனக் குறுகி மாசறு
தேசினர் சிறுவராய்ச் சிறுகிக் கீழ்கிடந
தேசின ரெனவழு திரங்க லாயினுர். (கஎ)

கிழவுரு வெய்திய கேடின் மூவரு
மழவுருப் பாவராய் மயங்கி வாய்திறந்
தழவுரு மாற்றிய தென்னி லற்புத
விழவுருக் கற்பலான் மிக்க தில்லையே. (கஅ)

கருத்துமுற் றியதெனக் கனிந்து பாலராம்
விருததரைத் தன்றுடை மீதி லேயெடுத்
திருத்திநெய் பால்கலந் தேற்றச் சங்கில்வார்த்
தருததின ளருத்திமெல் லணையிற் சேர்த்துவாள். (கசு)

மீட்டுமப் புதல்வரை யெடுப்பள் மிக்கநீ
ராட்டுவ ளுதலினீ றணிவள் சங்கணி
பூட்டுவ ளுச்சியி லெண்ணை பொற்றுவ
ளாட்டுவ டொட்டிலிற் கிடத்தி யன்பினுல். (உ0)

தேவரு முனிவருஞ் செகத்தின் மாதவ
ரியாவருங் காணுறு திருக்கு முத்தொழின்
மூவரு மிவரெமை முற்றுங் காப்பதற்
காவரென் றறிந்துதா லாட்ட லாயினுள். (உக)

**தாலாட்டு.**

ஓங்கு கரமு முரமுந் திருநாவுந்
தேங்கமல மான்சேரச் சேருவீர் கண்வளரீர்
தாங்கு முடிக்கணியுந் தன்னிறமு நற்றவிசு
மாங்கமல மென்னவினி தாக்குவீர் கண்வளரீர். (உஉ)

எந்நாளு மும்பரியம் பரிதா மம்புயத்திற்
பொன்னு ரணியே பொருந்தல்செய்வீர் கண்வளரீர்
மின்னு ரணியும் விரிகுடையு மில்லிடமு
நன்னுக மென்ன நலம்பெறுவீர் கண்வளரீர். (உங).

மன்னுமலை மின்னையுஞ்சொன் மானையுமம் மாநயனப்
பொன்னையுமுத் தாரமெனப் பூணுவீர் கண்வளரீர்
பின்னமிலா நான்மறையின் பின்னுநடு வுந்நடுவின்
முன்னுமூ வர்முதலா மூவர்நீர் கண்வளரீர். (௨௪)

மேவலரு ருண்ணீறி வெண்ணீறெ ழச்சிரிக்குஞ்
சேவகனே யான சிறுவாநீ கண்வளரா
யேவகனுங் கன்னல்வில்லி யென்றவனை யன்றுவென்ற
பாவகனுங் கண்ணுறுடைய பாலகனே கண்வளராய். (௨௫)

ஓங்கியநின் றேவி யுடுத்தவுடை மீதயனைத்
தாங்குமயன் பாலுறங்குஞ் சந்ததியே கண்வளராய்
தேங்குகணை நான்குடைய தென்னிலங்கை மன்னுயிரை
வாங்குகணை தாங்குசிலை மைந்தாநீ கண்வளராய். (௨௬)

ஓதக் கடல்சூ ழுடையவனை யீன்றுபெற்ற
தாதைக சனிதத தனிடனே கண்வளராய்
யேதைச்சொல் வேனுலக மெல்லாம் படைத்தொருபெண்
பேதைக்கு வந்துதித்த பிள்ளாய்நீ கண்வளராய். (௨௭)

உய்வண்ண மூவரையு மொன்றாய தனித்தனியா
யிவ்வண்ணந் தாலாட்டி யேற்றெடுத்துப் பாலூட்டிச்
செவ்வண்ணத தண்டை சிலம்புசிறு தாளிலணிந்
தவ்வண்ண மாயவனை யாழிகையி லேபூட்டி. (௨௮)

மைந்தர் வனப்பு மனிவாயக் குறுநகையுஞ்
சுந்தரமுங் கண்டா டெண்டாள் களிகூர்ந்தாள்
தந்தையா யாவருக்குந் தாயருமா மூவருக்கு
மந்தமொரு நற்றாயுண் டான திசயமே. (௨௯)

என்னுமுரைச் சூதனைபார்த் தேந்திழையாள் கற்பினியில்
புன்னுதொரு மிறும்பூ துற்றுவப்புப் பெற்றனமாற்
பின்னு நிகழ்ந்த பரிசனைத்தும் பேசுகெனத்
துன்னுமறை மாதவர்முன் சூதனெடுத் தோதுவனால். (௩0)

முற்றிற்று. ஆக திருவிருத்தம் ௱௯௯.



## ௩-வது அனசூயை கற்புமகிமை சருக்கத்தின் சுருக்கம்.

அது கேட்டு முனிவரர், நீலத்து, பின்னடந்த அனைத்தும் கேட்கவிரும் பினேம், மாதவரே யெமக்கெடுத்துரைப்பீரெனவே, உரைப்பீராக, வெனவுரைக்கின் றார். பெருமை பொருந்திய மகாமேருவுக்குத் தென்றிசை முற்றும் மேகந்த வழாதசனூற்றண்ணீரின்றிக்கேடுற்று உணவற்று எவ்வுயிரும் அங்குதங்கா மல் எத்திக்கின் பழைபெய்கின்றதெனநினைந்து தள்ளாடின. மனிதர் பா ல் புனிதம் போகம் மோகம் அற்றன, முனிவர் பால் யோகம் யாகம் அற்றன, தாகமுற்றின, முறையுரன் அறறன, மரமெலாம சாகம் வேர்கள் அற்றன, குளம் நதிகூவல் வறந்தன, பூமியிலுள்ளோர்க்கு உயிர் உடல் கண்டம் நாவு வறந்தன, உருவுறுது கருவம் வறநதன, பயிர்வளம் வறந்தன, மழை வறந் திடின் வறளாதன வெவை! அப்போப்பட்ட காலததில் அன்னம் அரிதாகி க்காய் கனி கிழங்கின்றி எங்ஙனம் எகுவம் என்று இங்ஙனந்துன்புறு மாத வர் துயரறிந்து, அனசூயை தன் பனனசாலையினூடுறைந்து, நண்பினுலொ ருபண்புசெயதாள். தன் றவததனடி விளககிய நீரைககையிலெடுததது, இறை வனை நினைந்து, எங்கணு மழைபொழிந்து முனபோலுலகிலின்பம் பெருக வென்று வீசினள். அந்த நன்னீரானது எழுந்து பன்னிரண்டு யோசனை தூரத்துக்குள் சப்தமேகங்களாய் நிரைகொண்டதோ தேறுகின்றிலம். மூவ ர் செய்ததிற மகற்றிய வலியினுல் முடிவிலாத அன்பினர் கற்பினுககு எவர் செயலு மெதிரியலுமா! மங்கையது கற்பெனு மேன்மையான்மழை பொழி ந்ததாற் காய்கனி கிழங்கு சாகம்பலபோகமுமிகுந்தன. பசிவளர்ந்து, உடற ளர்ந்து, இளைததவரெவருமங்கடைந்து, இடரையகற்றினர். வந்தவந்த த பசிகட்கெல்லாம் சந்தன மரங்கள், சீதளம், தரவும், கூந்தற் பனையும், மூங் கிலும், தளர்வாரவீசவும் முக்கனி பால்சருக்கரையளைந்த வன்னத்தை தா யையொத்தவன சூயைபடைகக வுண்டானந்த மடைந்தனர். அங்கடைந்த வர் சங்கடங்களை யெல்லாம் அன்ன பூரணி யென்னத்தவிர்த்து வசிக்குங் காலததில் மேருவின் பககததில் வதிந்த மூவரு முனிபன்னியின் செயலு ன்னி, அரிதாகிய திருவிளையாடல் செய்யககிழமாகித், நடியோடு தடுமாறி த்தளர்ந்து, மூப்பினமிழந்து, நடைததகிப்பொதகி, தலைமுடி யோடடனரை த்து முகம் வலிததுச் சுரிதது, முக்கிக்கக்கி, என்பு நரம்புதுன்ன, யஞ்ஞோ பவீத மின்னமேனி கூனிவயிற்றிற் பசி கொதிப்பப் பன்னசாலையின் வந் து பசிகொடிதே யென்றுரைப்ப; அதைக்கேட்டன்னை வெளியில்வர இவர் கள் இளைப்புந்தவிப்புமிகுந்து அவசமாக, அவள் சிந்தை பயந்தெடுத்து அ ன்னோர் மூர்ச்சைக்கேற்றன கொடுத்துத்தேற்ற, தேறிய பின்னர் அடிவிள க்கி ஆசனந்துளக்கி யுபசாரஞ்செய்து இன்ன பாத்திரங்கிடையாதென்றுள ம் பற்றிப் பொசிக்குமிடந்தூய்தாக்கி பாத்திரம் விளக்கி அறுசுவையுண்டிய மைத்து நீரளார்த்து அமுதுண்மினென,பின்னர்மூவரும் உடுத்தியிரா நின்ற



திருமூர்த்திகளின தேவிகள் ஸ்நானஞ்செய்தல நாரதர் மூவரின மனைவிகள் தவம்புரிதல C.V.N.

LITH: BY CHAVALI RAMASWAMI SASTRI, MADRAS.

துகிலகறறிலுண்பேம் அன்றேல் உண்ணேம் என்றுரை யாதனவுரைத்தார். கேட்டளவிற் செவிபொத்தி அரகரவென்றஞ்சித் துன்பமிஞ்சி நீவிரெடுத்தமொழி தீது இது கேட்க் விதியோ; நல்லது கொடுத்தவன்னம் பொசித்து நன்மை கூறுவதே தேவரீரது தன்மை யென்றுகூற; அம்மூவரும் எமதுமொழி கேட்டிலேயேல் உண்ணேம் உயிரிழப்பேமென்ன, அம்மொழி கேட்டு இதுவுமோர் சோதனையோவென்று மனதுட்கொண்டு, உமது கருத்தெப்படியோ வப்படியே முற்றுமென்று கூறித் தன்கணவன் பாததீர்த்தத்தை அங்கைகொண்டு என்னிறைவன் என்னுள்ளத் திருப்பானுகில் என் முன்பாக விம்மூவரும் சிறுர்களாய் விடுகவென்று செகத்தில் வீச, எதிரேசினர்போலக் கீழ்க்கிடந்து சிறுவராயழலாயினர். கிழவுருவெய்திய மூவருமழவுருவாகிமயங்கியழவுருமாற்றிய கற்பினற்புதத்துக் குமிக்கதியாதுள! நங்கருத்து முற்றியதெனக் கனிந்து பாலராம் விருத்தனைத்தன்றுடை மீதெடுத்திருததி நெய் பால் கலந்து சங்கில் வார்த்தூப புகட்டி அணையிற் சேர்ந்துவாள் மீட்டும் புதல்வரை யெடுப்பாள், நீராட்டுவாள், நெற்றியில் நீறணிவாள், சங்கணிபூட்டுவாள், உச்சியிலெண்ணை தெய்ப்பாள், தொட்டிலினமர்த்தி யாட்டுவாள், தேவர் முனிவரி யாவருங்காணுமூவரும் எமைமுறறுங்காப்புசற காவரென்று தாலாட்டினுள், என்றுரைதத சூதரைப்பார்த்துமேனடந்ததைச சொல்லுமென்று கேட்கச்சொல்லுவார்.

முற்றிற்று.



## ச-வது தேவிமார் விரதச் சருக்கம்.



கலிவிருத்தம்.

இங்ஙியர்க ளிவ்வணரி ருப்பவிவர் காதன்
மங்கையர்க ளுடியுபர் வானுலக டைந்தே
யங்கவரோ டேவினவ லானபொழு தாறு
நங்கையர்க ளோடுமெறை நாரதனு ரைப்பான். (க)

ஆவலுறு மூவர்செய லன்னையரே கேண்மின்
ஞவலுறு தீவிலுயர் ஞானவன மங்கே
தாவலுறு மத்திரித வம்புரிவ னன்றே
னேவலுறு பன்னியன ஸின்னமுத மன்ருள். (உ)

அத்தெரிவை கற்பியல றிந்திடநி னைந்தே
மெய்த்திறவி ருத்தரென வேபசிமி குந்தே
முத்திறக டத்துமவர் மூவருமடைந்தா
ரெத்திறம்வி ளைந்ததுகொ லென்றறிகி லோமே. (௩)

நீவிருயர் ஞானவன நீளிடையி னாளிற்
போவிரவ ணையவர்பொ ருந்துவரெ னாமுன்
றாவரிய தேவர்பதி தன்னையக றாய்மார்
மூவருமி மாசலமு கட்டிடைய டைந்தார். (௪)

அத்திரித வத்திறைவ னன்னமுனி பன்னி
மெய்த்திரிவி லாளவடன் வீறறிகு வோமென்
றித்திரிகு ணத்தர்செல்வ தேதமென வேத
முத்திரிக ளுக்குமன முற்றினகி லேசம். (௫)

எதினிவி சாரமெத னப்பணிவ ரைக்கோ
மாதினொரு மூவருமி மாசலம கன்றே
மேதினிசொல் ஞானவன மேவிமக வாவி
போதினிழன் மீதயர்பொ ருந்தினரு வந்தே. (௬)

ஆதியிறை வோருறைத லானவன ஞானச்
சோதிமய மாய்நிறைதல் கண்டெடறு வண்டே
நீதிபர ரிங்குறைத னிச்சயமெ னக்கா
ரோதியர்கண் மூவரவ னுற்றனரு வப்பால். (௭)

ஆயபொழு தத்திரிதனாச்சிரம மெல்லாந்
தூயரிவர் மெய்யிலுறு சோதியுற லாலே
மேயபக லேககன மீதிலுறு சோதி
யேயும்வகை யாதெனவி ருந்தவரெ ழுந்தார். (௮)

மாதவரெ லாருமக வாவியரு கேபோ
யாதவரு மேபரவு மன்னையரை யன்னாள்
சூதறுபுள் ளேறுமிசை சூட்சிபெறு காட்சி
நீதறிவி னூடெரி சித்ததிச யித்தார். (௯)

தெரிசனைசெய் தேயதிச யித்தவரெல் லோருந்
துரிசறும னத்தொடன சூயையொடு கூறப்
பரிசுபெறு மத்திரிப தத்தினைநி னைந்தே
வரிசைபெறு புத்திரரை வாரமொடு பாரா. (௧௦)

சிந்தனைசெய் தன்னவள்சி றப்பவெவ ராலும்
வந்தனைசெய் மூவருமம் மாதவர்கள் சூழ
வந்தநிலை வாணினைய கன்றுமக வாவிச்
சந்தநிறை போதினிழ றன்னிடைய டைந்தார். (௧௧)

பங்கயமணித்தொடைப ரித்தயனை யுன்னி
யங்கயனெ னச்சிலவ ரங்கணமர் கின்றார்
பொங்குதுள பத்தொடைபு னைந்தரியை நாடிச்
செங்கண் முகிலன்னசில செல்வருறை கின்றார். (௧௨)

அக்கமணி மாலிகைய ணிந்தரனை யுன்னிச்
செக்கர்முடி யோடுசில திவ்யருறை கின்றார்
பக்கமற மிக்கதொர்ப ரப்பிரம மென்பா
ரொக்கவுணர் கிற்குமவ ருங்குழுமு கின்றார். (௧௩)

ஆயவர்சி றப்புமவ்வ ருந்தவரு வந்தே
மேயவன மேன்மையும் விருப்பினொடு நோக்கித்
தூயவன மீதெனம கிழ்ந்துநிறை சோதிச
காயவுரு மாறியுயர் கன்னியர்க ளானார். (௧௪)

கன்னியர்க டம்வடிவு கண்டுசடை கொண்ட
சென்னியர்கள் வேதியர்கள் சீரியர்க ளன்றோர்
பன்னியர்க ணண்பினர்கள் பண்பினர்க ளல்லா
லன்னியர்க ளல்லவென வன்னவர்கள் சூழ. (௧௫)

அன்னையன சூழையத னகத்திடைய டைந்தே
முன்னையர னாதியொரு மூவரையு மூவா
மின்னனைய பாலரென மெய்ப்பொடு வளர்ப்பா
யுன்னையென கூறுவ துனக்குநிக ருண்டோ. (௧௬)

## வேறு.

காமினீ யெம்முயிர்க் கணவர்க் குற்றதா
யாமினி யென்றுனை யடைந்த வெங்கட
மாமினீ பொறுமையின் வளத்தி னீகையிற்
பூமினீ யென்றவர் புகன்ற போதினில் (௧௭)

சீரிய ரியாரிவர் தேவி மாரெனக்
கூரிய மனத்தினிற் குணித்துக் கொள்கையால்
வேரிய மலர்கொ டர்ச்சித்து வேட்கையா
லேரிய நீரென திடத்தி லெய்தவே. (௧௮)

ஏதுமா தவஞ்செய்தே னெளிய னென்னவே
மாதுதாழ்ந் தெழுவவள் வதன நோக்கியிப்
போதிலெம் புருடர்நின் புதல்வ ராவதற்
கேதுநீ நினைதியென் றிரங்க லாயினார். (௧௯)

அன்றவ ரிரந்தன ரன்னே முன்னையா
மின்றவர் தங்களை யிரக்கின் றேமெம்பா
னன்றவர் தம்மைநீ நல்கி லொல்கிலோ
மென்றவர் மொழிந்தவற் கிரக்க மெய்தினள். (௨௰)

அப்படி யாவதற் கைய மில்லையென்
மெய்ப்படி மாதவன் விண்ணு ளானன்றே
னிப்படி வருமள விருத்தி ரீங்கென
மைப்படி கண்ணினள் மகிழ்ந்து கூறினள். (௨௧)

கூறிய வார்த்தையுட் கொண்டன் னோர்மனந்
தேறிய துணர்ந்துகாய் கிழங்கு தீங்கனி
யேறிய போகம்யா னீய வேநுகர்ந்
தாறிய வுளத்தொடிங் கமைதி ரன்னைமீர். (௨௨)

என்றிம்மா துரைப்பவெம் மிறைவ ரம்மிடத்
தொன்றினு லல்லதோன் றுண்ப துத்தம
மன்றுநீ யருள்செயு மளவு நோற்பதற்
கின்றுநீ யோரிட மிதுவென் றேதென்றார். (௨௩)

கனிவரு மொழியினள் கழறு வாளெழி
னனிவரு ஞானகா னனமொன் றுண்டருட்
டனிவரு ஞானதீர்த் தமுமுண் டாங்கதின்
முனிவர ரெழுவரு முயல்கின் றார்தவம். (௨௪)

தவமியற் றிடுபவர்க் கேற்ற தானமற்
றவமகற் றிடுமுமக் கன்ப ராகிய
சிவன்முதற் றலைவரைச் சேர்க்கு மென்னவங்
குவகைபெற் றத்தலத் துற்று நோற்கின்றார். (௨௫)

நோற்றிடு மூவரு நோன்மை நீர்படிந்
தேற்றிடப் பாதலத் திருந்து மூவரோத்
தாற்றிடு முந்நதி யந்த வாவியிற்
றோற்றிடுந் தன்மையார் சொல்லற் பாலரோ. (௨௬)

பாற்பதி கங்கையிற் பங்க யாசனி
மாற்பதி யமுனையில் வாணி வாணியி
லேற்பதின் மூழ்கித்தம் மிறைவர் மூவர்தம்
மேற்பதி யன்பினுல் விரத முற்றுளார். (௨௭)

தன்மமா ஞானதீர்த் தத்தின் மூழ்குவார்
சென்மமாங் கடலைவிட் டேறித் தேறருங்
கன்மமாந் தீவினை கடந்து காண்பரும்
வன்மமா முத்தியின் மார்க்கஞ் சேர்வரால். (உஅ)

தங்கிய ஞானதீர்த் தத்தி னுத்தரங்
கங்கைதென் கீழதா யமுனை காமுறப்
பொங்குதென் மேற்கதாய் வாணி பொற்பினே
டங்குறு மவற்றில்விண் ணவர்வந் தாடுவார். (உகூ)

எந்நதி படிந்திடும் பலனு மேற்றமா
மூந்நதி மூழ்கிடி னுதவு மோகமா
மந்நதி மூன்றுமிங் கமைத லாலதி
னன்னதி யாகுமிஞ் ஞானவாவியே. (௩0)

அன்னவா வியினரு காக வங்கவன்
சொன்னவா றருந்தவந் தொடங்கி மூவரு
மின்னவா றிருந்தன ரென்னச் சூதனு
முன்னவா வற்றமா முனிவர்க் கோதினான். (௩க)

முற்றிற்று. ஆக திருவிருத்தம் ௱சூச.



## ச-வது தேவிமார் விரதச் சருக்கத்தின் சுருக்கம்.



இங்கே யிப்படியிருக்க, விம்மூவர் தேவிமார் தேவலோகத்திற் போய் சுரரிடம் விசாரித்துக்கொண்டிருக்குங் காலையில், நாரதர் சந்தித்தன்னையரே கேண் மின், பூலோகத்தில் நாவலந்தீவில் அத்திரிமுனிவன் பத்தினிகற்பை யறியமுத்திறம் நடத்து மூவரும் கிழவுருவாய்ச் சென்றார், எத்திறம் விளைந் ததோ தெரியாது, ஆதலால் நீவிர் அவ்வனத்திற்கிப்போதே போனாற் காண லாம் என்றோது முன், மூவரை நீங்கிய தாய்மார் அவ்விடம் விட்டுஇமைய பருவதத்தையடைந்து அனசூயை கற்பின் வலியையறிவே மென்றும், இத் திரி குணத்தர் சென்றது குற்றமென்றும், முத்திரிகளும் மனக்கவலையுற்று, ஒரு வாறு தேறி, மலை மகளோடு அவ்விட நீங்கி, ஞனகானனத்தில் யாகதீர் த்தத்தில் அரசின் நிழற்கண்ணிருந்து ஆதியிறைவர் இங்குறைதலால் இவ்வ னம் ஞானச்சோதி யாய்நிறைதல் கண்டு, உடறு வண்டு, நீதிபர ரிங்குவதித னிச்சயமென்று மூவருமுவந்தார். அக்காலத்தில், அத்திரியாச்சிரம முற்று மிவர் மேனியின் காந்திபடலால் பகலோனைப்போன்ற விதமியாதென்று மு னிவரெழுந்தார், எழுந்து, சூரியர்கள் தெரிசிக்கும் அன்னையரையும், அக்கா

லத்திற் றூமமைப்பூமீது அன்னமேறி யிருத்தலையும், குற்றமற்ற விடத்திற் றரிசித்து, அதிசயித்து, பரிசுத்தமான மனதோடு அனசூயையுடன் கூற, இவளும் அத்திரிமுனிவன் கழனிணைந்து,உரிமையுடன் புத்திரரைப்பார்த்துச், சிந்தனைசெய்து சிறப்புற்றிருப்ப எவரானும் வந்திக்கப்பட்ட அம்மூவரும், தாமரை மணிமாலையைத்தரித்துச் சிலர் பங்கயனை நினைந்து தவம்புரிதலும், துளசிமாலையைத்தரித்துச் சிலர் அரியை நினைந்து தவம்புரிதலும், உருத்திராக்கமாலையைத்தரித்துச் சிலர் அரனை நினைந்து தவம்புரிதலும், உலகனைத்தும் பரப்பிரமமாயிலகுவதறிந்து சிலர் தவம்புரிதலும், சிலமுனிவர் பிரமானந்தமடைந்திருத்தலும், ஆகிய விவற்றை விருப்பத்தோடு பார்த்து பரிசுத்தமாகிய வனமிது வென்று மகிழ்ந்து அச்சோதிக்காயவுருமாறிக் கன்னியர்களானார்கள். அக்கன்னியர் வடிவைக்கண்டு, சடைகொண்ட சென்னியர், வேதியர், சீரியரிவர், பன்னியர், நண்பினர், பண்பினர், அன்னியரல்லனர், இவர் கடற்சூழ அன்னையர் அனசூயை யில்லத்திடையடைந்து, மின்னையொப்பாய்! முன்னையரறுகி மூவரையும் வளர்க்கப்பட்டவுன்னை, என்னைகூறுவாம்? உனக்கு நிகருண்டா! எம்முயிர்க் கணவர்க்குத்தாயா மென்றுன்னையடைந்தேம், எங்கடம்மாமியே; பொறுமையில், வளத்தில், ஈகையிற், பூமியே, யென்றிவர் கூறுங்கால், அவள் இவர் தேவிமாரென்று மனத்திற் குணித்து மலர்கொண்டர்ச்சித்து நீவி ரென்னிடத்தெய்த, எளியேனியாது தவம்புரிந்தே,னென்று அம்மாது தாழ்ந்தெழ;அவள் வதன நோக்கி இப்போதெம் புருடர் நின்புதல்வராதற் கேது நினைத்தாயென்றிரங்கினூர். அக்காலத்தில் நின்பா லன்னமிரந்தனர், அவர்களையிப்போ துன்பாலிரக்கின்றோம், எம்பாலவர்களை நல்கிற்றளரேம் என்று சொன்னவர்க்கிரங்கி அப்படி யாவதற்கய்யமில்லை,முனிவர் தேவலோகத்துப் போயிருக்கின்றூரவர் வரும்வரை யிங்கிருத்தீரென்று மைக்கருங்கண்ணாள் மகிழ்ச்சியிற்கூற; கேட்டு மனந்தேறியதுணர்ந்து காய் கனி கிழங்கிவன் புசித்துச்சந்தோஷ மனத்துடன் இங்கிருங்களன்னையர்களேயென; அதற்கவர்கள் எம்மிடத்தெம்மிறைவர் வந்தாலன்றி ஒன்று முண்ணேமென; அப்படியானுல் அழகு பொருந்திய ஞானகானனத்தில்ஞான தீர்த்தமொன்றுண்டு,அதிற் சத்தரிஷி கடவுஞ்செய்கின்றனர்,அது தவசிகட் கேற்றவிடம்,அங்கே யுபவசித்துத்தவமுயல் வீரேற் சிவன்முதற்றலை வரைச்சேர்க்கு மென்று கூற,நன்றென்று அங்கே வந்தார்கள்.அவர்கள் படிந்து,தவம் நோற்றிட,பாதலத்திருந்து மூன்று நதியந்தவாவியிற்றோன்றின பார்வதி,சரஸ்வதி,இலக்குமி,யிவர்கள் கங்கை சரஸ்வதி யமுனையிவற்றின் முறையே யாடிததத்தமிறைவர் மேற்பதி யன்புபூண்டுவிரதம் நோற்றூர். ஞானதீர்த்தத்தின் மூழ்குவோர் சென்மக்கடலும் கன்மமாந்தீவினையும் கடந்து முத்தியடைவர். ஞானதீர்த்தத்தின் வடக்கில் கங்கையும் கிழக்கில் யமுனையும் தென்மேற்கில் வாணியுமாக விளங்கும் இவற்றின் விண்ணவரானவர்

எத்தீர்த்தத்திற்படிந்த பலனும் இம்மூத்தீர்த்தம் உதவும்; ஆனதால் இந்தஞா ன தீர்த்தமிக்கமேலாயது என்று அனசூயை சொல்ல, அத்தீர்த்தத்தருகே மூவருமாதவஞ் செய்யத்துடங்கியிருந்தார் என்று சூதர் நைமிசாரண்ய வாசிகட்குச்சொன்னார்.

முற்றிற்று.



## ௫-வது நாரதன்வரு சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சூதனே வணங்கிக்கேட்பச் சொல்லுவான் முனிவர்க் கன்னான்
வேதனை முகுந்தன்றன்னை விமலனை யமல மான
மாதனை யர்களா யன்னாள் வளர்க்கவிக் கன்னிமார்கள்
போதனையாது காதல் புரிந்துமா தவஞ்செய் போது. (௧)

நாரதன் வானி னின்று ஞானகா னனத்தை நண்ணிச்
சீரது தவரூக் கற்பின் செல்வியாச் சிரமத் திற்போய
மாரத மழலைச் செவ்வாய் ஸ்மந்தரைக் கண்டா னன்பு
கூரதி சயமுற் றனைக் கோதைவந் தடியிற் றாழ்ந்தாள். (௨)

அடியிணை விளக்கி யன்போ டறுசுவை யுண்டி யீந்தா
டியிடை யவளை நோக்கித் துதியுஞ்செய் தமுதந் துய்த்த
முடியுடை முனிவன் சொல்வா னயன்மக முடித்து வானில்
வடிவுடை வேந்தன் யாகம் வளர்க்கமா தவனங் குற்றான் (௩)

அத்திரி முனிவ னங்கே யாயிழை நீயிங் கேயிப்
புத்திர ரார்கொ லென்று புகன்றனன் புகலக் கேட்டுச்
சித்திர மனையாள் சொல்வாள் சிறுவர்தஞ் செயலும் பொற்பு
மித்திர மென்ன நீயே யறிவையா னறியே னென்றாள். (௪)

என்றிவள் சொல்லக் கேட்ட விருடியிங் கிவரை நாடி
யொன்றிய மடவார் தாமெங் குற்றன ருரையென் றோத
வன்றவர் ஞான வாவியருக்கருந் தவஞ்செய் கின்றார்
தூன்றென வன்னாள் கூறித் துன்னியன் னவர்பாற் சென்றான். (௫)

அன்னையர் மூவ ரூணி லாதுமாதவமே செய்ய
முன்னைய முனிவர் பன்னி மார்தவ முயலா நிற்பப்
பின்னையிம் மூவர் தன்மை தேர்ந்தடி பேண வன்னோர்
தன்னைய முனிக்கு நெஞ்சத் தாலுப சாரஞ் செய்தார். (௬)

